# நீல
# கலர் நரி







பச்சை பசேலென  இருக்கும் ஒரு அடர்ந்த காட்டில் வாழ்ந்து வந்த ஒரு குள்ள நரியின் பெயர் பெரிய ஊளையாம். அவன் எல்லா நேரமும் ஒரு குகைக்குள்ளேயே மறைந்து இருந்தானாம் ஏன்னா அவனுக்கு காட்டில் உள்ள மத்த விலங்குகளிடம் அவ்வளவு பயமாம்.

பெரிய ஊளைக்கு  ஒரு பயங்கரமான கனவு அடிக்கடி வந்து துன்புறுத்தியதாம், அது என்னன்னா, நீண்ட  நகங்கள் உடைய ஒரு பெரிய புலி தன்னை பின் தொடர்ந்து வருவது போலவே இருந்ததாம்.

பெரிய ஊளை பயப்படாத சமயம் என்று சொன்னால் அது தன்னுடைய நரி கூட்டம் மாலை பொழுதுகளில் ஊளை இடும் போது தான். அப்போது மட்டும் எப்போதும் இல்லாத ஒரு தையிரியம் அவனுக்கு தொற்றி கொள்ளும். ஏன்னா மத்த எல்லா நரியை விடவும் சத்தமாகவும், நீண்ட நேரமும்  அவனால் மட்டுமே ஊளையிட முடியும்.



பெரிய ஊளை வேட்டைக்கு போவதற்கே பயமாக இருந்ததால் அது நிறைய நாள் பசியிலேயே வாடியது.  ஒரு மாலை அதன் வயிறு கப கப வென எரிய ஆரம்பதித்தது ஏன்னா அந்த நாள் முழுவதும் அவன் சாப்பிடவே இல்லையாம்.

மெதுவாக ஊரின் சந்தையின் வாசலில் வந்து செடிகளின் பின்னால் மறைந்து காத்திருந்தது. பக்கத்தில் இருந்த குடிசையில் இருந்து தோசை- மசாலா வடை வாசனை மூக்கை தொலைத்தது. அந்த நேரம் பார்த்து அங்கே படுத்து கிடந்த நாயொன்று நரியை மோப்பம் பிடித்து விட்டது அது “லொள்... லொள்...” என்று கத்தி கொண்டே அவனை நோக்கி பாய்ந்தது.



திடீருனு ஊரில் உள்ள நாய்கள் எல்லாம் பெரிய ஊளையை பார்த்து குறைத்து கொண்டே பாய்ந்து வந்தன. பெரிய ஊளை உயிரை கையில் பிடித்து கொண்டு ஓடியது.



வெறியாக பாய்ந்து வரும் நாயிகளின் கோர பற்களிலிருந்து சிறிதே தப்பி ஓடி கொண்டிருந்தது பெரிய ஊளை. அது ஒரு சாயம் போடுகிறவரின் வீட்டில் நுழைந்து விட்டது. சாயம் போட்டிருந்த புடவைகள் தன் மூஞ்சில் உராசிய படியே  ஓடிக்கொண்டிருந்தது.

கடைசியாக தப்பிப்பதற்கு வேறு வழியில்லாமல் தன்னுடைய முழு தெம்பையும் கொண்டு ஒரு தொட்டியில் பாய்ந்தது. அந்த தொட்டியில் முழுவதும் நீல நிற சாயம் நிரப்பப்பட்டிருந்தது.





பெரிய ஊளை மூச்சை பிடிச்சிக்கிட்டு தொட்டியிலேயே கிடந்தது. சாயம் தண்ணீ கண்ணு காது மூக்கு என எல்லாத்துலையும் பூந்துடுச்சு. ஆனாலும் ஒரு சத்தம் வரலேயே. அவனுக்கு தெரியும் வெளியே நாயிங்க கூட்டமா தன்னை தேடிகிட்டு இருக்குங்கன்னு. நாயிங்களும் கொஞ்ச நேரம் மோப்பம் பிடிச்சிட்டு நின்னுச்சிங்க ஆனா பெரிய ஊளையனை காணும். தப்பிச்சி ஓடிட்டான் னு நினைச்சு அதுங்களும் போயிடிச்சுங்க. பெரிய ஊளையனின் மொத்த உடம்பும் சாயத்தில முங்கிடுச்சி.





கொஞ்சம் நேரம் கழிச்சு எல்லாம் அமைதியாக இருப்பதை பார்த்து பெரிய ஊளை தொட்டிக்கு வெளியே தலையை நீட்டிச்சாம். நாய்களின் வாசனை எதுவும் இல்லாததால் கொஞ்சம் துணிவுடன் வெளியே வர முயன்றது.

அந்த நேரம் ஏதோ பிள்ளைகளின் சத்தம் பெரிய ஊளைக்கு கேட்டது. சாயக்காரரின் குடும்பம் அங்கு காய வைத்துருக்கிற துணிகளை எடுக்க வந்திருந்தனர். ஏதோ நீல நிற விலங்கு ஒன்று தொட்டியிலிருந்து எட்டி பார்ப்பதை பார்த்து அதிர்ச்சியடைந்தனர். மொத்த குடும்பமே ஓ.. ஓ !! வென்று அலற தொடங்கியது…







பெரிய ஊளை அங்கிருந்து
தப்பிச்சோம் புளைச்சோம்ன்னு
காட்டுக்கு ஒரே ஓட்டம் பிடித்தது.





காட்டில் இப்படி ஒரு விசித்திர நிறமுடைய விலங்கை பார்த்திராத மற்ற விலங்குகள் பயந்து ஒதுங்கின.
“ஏதோ விஷ பற்கள் கொண்ட  விலங்காக இருக்குமோ” என்று எண்ணியது புலி
“ஐயோ எவ்வளவு கூர்மையாக இருக்கிறது இவனது நகங்கள். கடுமையாக தாக்குவனோ?” என்று பீதியுடன் பார்த்தது முயல்
“நம்மை ஆளுவதற்கு அந்த இந்திரனையே அனுப்பி விட்டானோ கடவுள்” என்று சிலாகித்து கொண்டன புத்திசாலியான குரங்குகள்.
இப்படி பயந்து போயி எல்லா விலங்குகளும் தங்களை காத்துக்கொள்ள காட்டுக்குள் ஓடி மறைந்தன.





எல்லா விலங்குகளும் ஓடி
போன பிறகு பெரிய ஊளை
ஆல மரத்திற்கு கீழே அமர்ந்து
அமைதியாக யோசித்தது,
பெரிய விலங்கிலிருந்து
சிறியது வரைக்கும் தன்னை
பார்த்து ஓடி ஒளிவதை
உணர்ந்த பெரிய
ஊளையோட மகிழ்ச்சிக்கு
எல்லையே இல்லை.
பெரிய ஊளை பெரு மூச்சு
விட்டு “இனி நமக்கு நல்ல
காலம் பொறந்தாச்சு ன்னு”
சொல்லி  கொண்டது







காட்டில் உள்ள விலங்குகள் அனைத்தும் தன்னை கண்டு பயப்படுவதால் தானே காட்டின் ராஜா என்று அறிவித்து கொண்டான் பெரிய ஊளை. அப்போதிலிருந்து அவன் மற்றவர்களை மிரட்டுவதும் உருட்டுவதுமாக மாறி போனான்.

புலியை தனது பிரதம மந்திரியாக நியமித்தது. மயிலை தனது தூதுவனாக ஆக்கியது. குரங்குகளை தனக்கு விசிறி விடும் சேவகர்களாக ஆக்கி கொண்டது. பெரிய ஊளை முன் யாராவது பேச விரும்பினால் மண்டியிட்டு தான் உட்கார வேண்டும்.

தன்னை யாராவது காண வந்தால் எல்லா சுவையான உணவுகளையும் கொண்டு வர வேண்டும். சுவையான மாம்பழங்கள், தித்திக்கும் கரும்பு, நிறைய குட்டி எலிகள் என ஏக போக விருந்து தான்...

காட்டில் உள்ள எல்லா விலங்குகளும் பெரிய ஊளையை வணங்கினாலும் நரிகள் மட்டும் அதை வணங்கவில்லை. அவைகளுக்கு தன் இனத்திலிருந்து ஒருவன் ராஜாவாக இருப்பதில் விருப்பமில்லை. இதனால் நரிகள் எல்லாம் காட்டில் வேறு இடத்திற்கு சென்று விட்டன.





ஒரு இரவு பெரிய ஊளை தனக்கு பிடித்த குன்றின் மேல் அமர்ந்திருந்தது. சில நேரங்களில் இப்படி தனியாக அமர்ந்திருப்பது அவனுக்கு பிடித்திருந்தது. அந்த சமயத்தில் தான் காட்டின் மற்ற நரிகளின் ஊளைச் சத்தம் காற்றை கிழித்து கொண்டு வருவதையும், வேட்டையாடுவதற்கு அவைகள் ஒன்று கூடியுள்ளன என்பதையும் உணர்ந்தது பெரிய ஊளை.



அழுகை போன்ற நரிகளின் ஊளை சத்தம் பெரிய ஊளையின் காதில் ரீங்காரமாக விழுந்தது. அவனால் தன்னை கட்டுப்படுத்தி கொள்ள முடியவில்லை. அந்த சத்தத்திற்கு பதில் ஊளையிட வேண்டும் என்று மிகவும் ஆசையாக அவனுக்கு இருந்தது.

தான் காட்டுக்கு ராஜா என்பதை மறந்து விட்டது பெரிய ஊளை. தன்னுடைய முகத்தை நிலாவின் முன் காட்டி பெரும் ஊளையிட்டது. இது வரைக்கும் அது போல் ஒரு நீண்ட ஊளையை யாருமே கேட்டதில்லை.



பெரிய ஊளையின் சத்தம் மொத்த காட்டேயே எழுப்பி விட்டது. எல்லா விலங்குகளும் ஆச்சர்யத்துடன் ஓடி வந்து பார்த்தன. அவை பாய்ந்தும், பறந்தும், ஊர்ந்தும் வந்து பார்த்தன. அந்த நீல கலருக்குள் ஒளிந்திருக்கும் நரியினை எல்லா விலங்குகளும் கண்டு கொண்டன. அவர்களை நரி முட்டாளாக்கி விட்டதை உணர்ந்தன.

கர்ஜித்தும் , கத்தி கொண்டும், சீறி கொண்டும் நரியை நோக்கி எல்லா விலங்குகளும் பாய்ந்து அதை விரட்டின. அதற்கு பிறகு நீல கலர் நரி காட்டின் ராஜாவாக இல்லை.





எப்போதும் போல் நரி சாப்பாட்டுக்கு வேட்டையாடி தான் இறை தேட வேண்டி இருந்தது. நீல கலர் நிறமும் மங்கி கொண்டே போனது. விரைவில் அதன் சொந்த நிறத்துக்கு மாறி விட்டது. நரி கூட்டமும் பெரிய ஊளையை தங்களோடு சேர்த்துக்கொண்டன. ஒவ்வொரு இரவும் அவனும் நரி கூட்டத்தோடு சேர்ந்து நீண்ட பெரும் ஊளையிடுவது வழக்கமாகி போனது.

பெரிய ஊளையின் சத்தத்தை கேட்ட அந்த ஊர் மக்களும் மற்றவர்களிடம் கதை சொல்லும் போது “எங்கள் ஊரில் ஒரு நரி இருப்பதாகவும் அது ஒவ்வொரு இரவும் தனியாக காட்டில் உட்கார்ந்து ஒரு சோகமான குரலில் நீண்ட ஊளை விடுவதாகவும்” கூறினர்.



## கதையின் பின்னணி

இந்த கதை எம்பத்தி நாளு பஞ்சதந்திர கதைகளுள் ஒன்றாகும். பஞ்சதந்திர கதைகள் முக்கியமாக நீதி கதைகளாகும். அவை அனைத்துமே அற வாழ்க்கை நெறி முறைகளை கூறும் கதைகள். ஒரு ராஜாவின் மூன்று முட்டாள் பையன்களுக்காக எழுதப்பட்டவை.

இக்கதைகள் செம்மொழி சமஸ்க்ரிதத்தில் எழுதப்பட்டவை. குறைந்தது 2000 ஆண்டுகளுக்கு முன்னரே எழுதப்பட்டிருந்தது என்று கூறப்படுகிறது, வாய்மொழி கதைகளாகவும் கூறப்பட்டிருக்கிறது. இக்கதைகள் இந்தியாவில் மட்டுமல்ல பல நாடுகளிலும் பரவி இருக்கிறது. அந்தந்த நாட்டின் வாழ்க்கை முறைக்கேற்ப சொல்லப்பட்டிருக்கிறது. முதன்முதலில் ஜெர்மனியில் இப்புத்தகம் பல நூற்றாண்டுக்கு முன்னரே அச்சடிக்க பட்டிருக்கிறது.

